வெளியீடு எண் 173.



துளி – 1.



உ

# நமச்சிவாய வாழ்க








திருவாவடுதுறை ஆதீனம்

1963

வெளியீடு எண் 173.

உ

சிவமயம்

# நமச்சிவாய வாழ்க

இது

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்

இருபத்தொன்றுவது குருமகாசந்நிதானம்

**ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள்**

கட்டளையிட்டருளியபடி

வெளியிடப்பெற்றது.

திருவாதிரை வெளியீடு

திருவாவடுதுறை ஆதீனம்

1963

# பதிப்புரை

தேனாய், இன்னமுதாய், தீங்கரும்பின் கட்டியுமாய் ஆண்டவனை அனுபவித்த அடிகள் மணிவாசகர். அவர் மலர்வாயினின்றும் பிறந்த தேன் திருவாசகம். அத்தேனின் ஒரு துளியே சிவபுராணம்.

இது, திருவைந்தெழுத்தில் தொடங்கி, உயிர்கள் தோற்ற முறையை உணர்த்தி, அருபரத்தொருவன் அவனியில் வந்து குருபரனாகி ஆட்கொண்டருளிய எளிமையையும் அருமையையும் பெருங்கருணையையும் விளக்கி, அவனுடைய திருவருளைப் போற்றி, பயனையும் அறிவித்து நிற்கின்றது. இக்கருத்துக்களை மிக எளிய - இனிய நடையில் விளக்குகிறது இந்தச் சிறுநூல். ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் அருளாணைப்படி ஸ்ரீ ஆனந்த நடராஜப்பெருமான் மார்கழித் திருவாதிரைத்திருநாள் வெளியீடாக இது வெளிவருகிறது.

அன்பர்கள் 'சொல்லிய பாட்டின் பொருள் உணர்ந்து' ஓதி உய்வார்களாக.

திருச்சிற்றம்பலம்.

உ

தொல்லை யிரும்பிறவிச் சூழுந் தளை நீக்கி
அல்லலறுத் தானந்த மாக்கியதே – எல்லை
மருவா நெறியளிக்கும் வாதவூர் எங்கோன்
திருவா சகமென்னுந் தேன்.

திருப்பெருந்துறையில் :



அருபரத்தொருவன் அவனியில்வந்து குருபரனாகி அருளியகாட்சி

திருச்சிற்றம்பலம்

# நமச்சிவாய வாழ்க

## அற்புதக் காட்சி

திருப்பெருந்துறையில் குருந்தமரத்தின் அடியில் எழுந்தருளி இருக்கின்றார் குருநாதன். கண்ணோட்டமாக, வயது பதினாறு இருக்குமென்று துணியலாம். ஒவ்வொரு அவயவங்களிலும் இளமையும் அழகும் ததும்புகின்றன. கருணை கனிகின்றது. ஆயிரம் அடி ஆழமுள்ள நீர்நிலை போன்ற அமைதி அவர்முகத்தில் குடிகொண்டிருக்கிறது. மலர்ச்சியும், கவர்ச்சியும் அந்த முகத்திற்கு உள்ள தனித்தன்மை. இந்தக் குருநாதனுடைய இடக்கையிலே சிவஞானபோத ஏடு ஒன்று இருக்கிறது. வலக்கை மோனங்கடந்த ஞான நிலை. நீங்களும் நானும் ஒன்றுபட்டிருக்கிற நிலை; என்னோடு நீங்கள் ஒன்றியிருக்கிறபோது இப்படித்தான் இருக்கும்; உங்களோடு பிறந்து வளர்ந்த மூன்று பேர் இப்படித்தான் பிரிவர் என்பதைக் காட்டிக்கொண்டு இருக்கிறது. அவருடைய வலது பாதம் கீழே தொங்குகிறது. இடதுபாதம் வலது முழந்தாளின் மேலதாகக் காட்சியளிக்கிறது. நாலாபக்கமும் ஞானிகளின் திருக்கூட்டம். அவர்கள் பார்வையிற் பாவையெல்லாம் இவர்.

இந்த நிலையைப் புண்ணியவசமாக யாராவது நாம்பார்த்திருந்தோமானால் என்ன நினைத்திருப்போம்!

எண்பது வயதுக்கிழம் - என்கடன் பணிசெய்து கிடப்பதே என்ற ஒரு ஞானப்பழம், "கண்ணே! கண்ணிற் கருமணியே! மணியாடு பாவாய்!" என்று அநுபவித்ததே அந்த அநுபவத்தைப் பெற்றிருப்போம். சிவன் எல்லாப் பொருளிடத்தும் செறிவொழியாது வியாபித்திருக்கும் தன்மையை நேரில் உணர்ந்திருப்போம். இருந்திருந்தால் நாம் அடையும் ஆனந்தம் இருக்கட்டும். ஞானிகளின் நிலை எப்படி யிருந்தது என்று கவனிப்போம். அவர்களது உடல் அசையவில்லை. கண் இமைக்கவில்லை. கருத்துப் புறம்பே ஓடவில்லை. பதுமைகளா அல்லது மக்கள்தாமா? எனச் சந்தேகிக்க வேண்டியதாயிற்று.

இவ்வளவுக்கும், குருவுபதேசம் பேசாத போதனை. இந்த ஞானிகள் 'பாடங்கேட்டதோ கேளாத கேள்வி. பெற்றதோ பெறாத பேறு; அதாவது அறிவொடுங்கிய அவனேதானே ஆகிய அறிவு. இப்படி நடக்கிறது ஞான வகுப்பு. தன்னை மறந்து தானேயாகிய ஞானிகளின் கூடடத்திலே ஒருசிலரும் இருந்தார்கள். அவர்கள், மனம் ஒன்றிய நிலையிலும், 'நான் மறக்கினும் சொல்லும் நா நமச்சிவாயவே' என்ற நிலையில் நின்று 'ஹரஹர' 'ஹரஹர' என்று முழங்கிக்கொண்டிருந்தார்கள். ஒலி காற்றில் கரைந்து நெடுந்தூரம் வரையில் யாத்திரை செய்கிறது.

## காந்தம் இழுக்கிறது

அந்த வழியிலே ஒருவர் வருகிறார். ஆளைப் பார்த்தால் அமைதிக்கு உறைவிடம். துறவுக்குப் பேரரண். நிராசையின் களஞ்சியம். வேடத்தைப் பார்த்தாலோ அதிகாரம், ஆட்சிக்கேற்ற சூழ்ச்சித்திறம், ஆடம்பரமான ஆடைகளும் அணிகளும். கையிலோ பதினுயிரக்

கணக்கான பொன். சூழ எடுப்பாரும், பிடிப்பாரு மாகிய ஏவல்மக்கள் இத்தனையும். இப்படி ஒன்றற்கு ஒன்று மாறாகவே இருந்தாலும் உயிராகிய தலைவன் தானே உள்ளக்குதிரையில் ஏறிக்கொண்டு ஊரைச் சுற்றி விஷய சுகங்களைச் சேகரித்து விஷசாரத்தைச் சம்பாதித்துக் கொள்ளுகின்றான். வருகின்றவருடைய உயிர்த்தலைவனோ கட்டுப்பாட்டிற்கு அடங்கியுள்ளவன். ஆதலால் இந்த வேடம் போர்வை; மிகச்சீக்கிரத்தில் நாம் எடுத்தெறிய வேண்டியதுதான் என்று எண்ணி எண்ணிக் காலம் பார்த்துக்கொண்டிருப்பவன். இந்த உயிர்த்தலைவன் காதிலே ஹரஹர முழக்கம் புகுந்தது; சிந்தையைப் பிணித்தது. உள்ளக் குதிரையைப் பிடித் திழுக்கிறது. உள்ளக்குதிரை அணுக்கத்தில் மிகமிக வருகிறது.

மல்லிகைமலரின் மணம் காற்றிலே மிதந்து வரு கின்றது. மணம் வந்த வழியைப் பற்றிக்கொண்டே வண்டுகள் பறக்கின்றன. ஆனாய நாயனார் புல்லாங் குழல் ஊதினார். அந்த ஒலி வெறும் ஜடசங்கீத ஒலி அல்ல. திருவருள் வடிவான பஞ்சாக்ஷர பரநாதம். அந்த நாதம் வந்த வழியிலேயே பசுக்கள் ஓடினவாம். அதுபோல ஹரஹர முழக்கம் அமைச்சர்பெருமானைப் பிடித்து இழுத்துவிட்டது. விரைந்துவருகிறார். சிவசிவ ஒலி சிவபரம்பொருளைக் காட்டிவிட்டது. கண்டதும் அவர் உள்ளம் குருநாதனுடைய ஞானத்திருவுருவில் ஒட்டி ஒன்றாகியது. காந்தத்தில் ஒட்டிக்கொண்ட இரும்புபோல, சிவக்காந்தத்தில் ஆன்ம இரும்பு ஒட்டிக் கொண்டது. பிரிக்கமுடியவில்லை. பிரித்தெடுப்பதும் கஷ்டந்தான். அப்படிப் பிரிந்தாலும் இரும்புக்குத் துன்பந்தான். காந்தம் தன்னிற் பரவிக் காந்தப் பாது காப்பின் தன்மயமாக இருந்த இரும்புக்குக் காந்தம் விட்டால் விளையும் கதி என்ன?

## கூடிய பொருள் பிரியத்தானே வேண்டும்

பலநாள் ஒன்றுபட்ட அநுபவம் ஆனந்தந்தான். ஆனந்தத்தைத் தன்னளவில் அநுபவித்தால்மட்டும் போதுமா? அறிவுடைப்பெருமக்கள் அவ்வளவு தன்னலக்காரர்களா? அனைவரும் இத்தகைய இணையற்ற இன்பத்தை அநுபவிக்கவேண்டும் என்றுதானே எண்ணுவார்கள். அதுமட்டுமா! அதற்குரிய ஒருகருவியாக இவரைப் பயன்படுத்திக் கொள்ளவேண்டும் என்ற ஓர் எண்ணம் குருநாதனுக்கும் உண்டாயிற்று. நல்ல தண்ணீரை வயிற்றில் நிரப்பினால் தனக்குமட்டுமே உபயோகம். குடத்தில் நிரப்பினால் வீட்டிலுள்ள எல்லோருக்கும் பயன். குளத்தில் நிரப்பினால் அனைவருக்கும் பயன். ஆற்றில் பெருக்கினால் ஆயிரக்கணக்கான தூரம் உள்ள உயிரினங்கள் பருகிப் பயனை அடையும். அது போலத் திருவாதவூரடிகள் பெற்ற சிவானந்த வெள்ளத்தைத் தமிழ்நாடு எங்கணும் பாயச்செய்ய வேண்டும் என்ற திருவுள்ளக் குறிப்பு குருநாதனுக்கு உண்டாயிற்று. கூடியகாலத்து அநுபவங்கள் பிரிந்த காலத்தில்தான் உரைவாயிலாக இனிய பாடல்களாக வெளிப்படும். ஆதலால் குருநாதன் மறைந்தார். அடியார் கூட்டங்களும் உடன் மறைந்தன.

புல்லிக்கிடந்த தனது தலைவியை விட்டுத் தலைவன் புரண்டு படுத்தானும்; அவள் அழகான மேனியெல்லாம் தேமல் படர்ந்ததாம் என்று வள்ளுவர் சொல்லுகிறார். அதுபோல் குருநான் மறைந்ததுதான் தாமதம். மாணிக்கவாசகர் காதலனைப் பிரிந்த காதலியானார். பசுவைப் பிரிந்த கன்றுபோல ஆனார். நல்லரசைப் பிரிந்த நாடு ஆனார். ஞானசாரியனைப் பிரிந்து பேதுற்றார். உடல் மெலிவுற்றது. உள்ளம் வெதும்பிற்று. அவர் ‘அலைந்தேனை விடுதிகண்டாய்’ ‘ஆள்வாரிலி

மாடாவேனே' என்றெல்லாம் இரங்குகிறார். இறைவன் அருளுள்ளம் கனிந்தது. 'சிதம்பரத்தில் அனவரதமும் ஆனந்தத்தாண்டவம் புரிந்தருளுகின்றோம்; நீ அங்கு வா' என அசரீரி பிறந்தது. மணிவாசகருக்குச் சிறிது ஆறுதல். குருநாதன் எழுந்தருளியிருந்த குருந்தமரத்தடியில் தெய்வப் பீடிகை ஒன்றை அமைத்தார். அதில் குருபாதங்களை எழுந்தருளச்செய்தார். எப்போதும் பூசித்து வருகின்றார். இது ஓர் உண்மைக் காதலியின் செயல்.

கற்புக்கடன்பூண்ட காதலி கணவனைப் பிரிகிறாள். பிரிந்ததும் கூடற்காலத்து நிகழ்ச்சியும் மகிழ்ச்சியும் அவள் மனத்திரையில் படமாகின்றன. நிழலினருமை வெயிலில் தெரிவதுபோல, கூட்டப்பெருமை பேச்சுக்கு வருகிறது. அகவுறுப்பாகிய மனத்து இன்ப ஊற்றுச் சுரக்கிறது. அத்தகைய ஊற்றுநீர்தான் திருவருட்டேன். திருவருட்டேன் மனத்தாமரையில் ஊறிற்று.

ஒருநாள். பாடிப்பரவினால் பரமன் பெருங்கருணை கிட்டும் என்ற உறுதியான எண்ணம் உண்டாயிற்று. அங்ஙனம் உதித்த திருவருள் தோற்றந்தான் இந்தச் சிவபுராணம். நமக்கெல்லாம் கிடைத்த நல்ல துணை. மனநோய் மாற்றும் மருந்து. வினைகளை விலக்கும் குளிகை. பிறவிக்கடற்குப் பெருந்தோணி. இதனைப் பாராயணம் செய்வது ஒவ்வொரு மனிதனுடைய முதற் கடமை. இதனைப் பொருளறிந்து சொல்லவேண்டும் அல்லவா? அநுபவிப்போம்.

## வாழ்த்துகிறோம்

உலகில் சிறியவர்களைப் பெரியவர்கள் வாழ்த்துவது வழக்கம். வாழ்த்துகின்றவர்கள் வாழ்த்தினைப் பெறுகின்றவர்களைக்காட்டிலும் வயதில், அநுபவத்தில்,

திருவருட்பொலிவில் சிறந்தவர்களாக இருப்பார்கள்; வாழ்த்துப் பெறுகின்றவர்கள் எல்லாம்பெற்று நெடுங் காலம் நன்றாக வாழவேண்டுமென்ற நிறைமனத்துடன் வாழ்த்துவார்கள். வாழ்த்துப் பெறுகிறவன் அவர்கள் ஆசியால் நீடுவாழ்வான். இங்கே பெரியோர்க்கெல்லாம் பெரியவனாகிய இறைவனை வாழ்த்துகிறார். அதனைப் படிக்கின்ற நாமும் அவர் நிலையில் இருந்து அவனை வாழ்த்துகிறோம். இது பொருத்தமா என்ற சந்தேகம் நமக்கெல்லாம் உண்டாவது இயற்கைதான்.

நல்வினை தீவினைகளுக்கீடாக இன்பத் துன்பங்களை எம்மைப்போலவே எய்தும் தேவர்கள் வினையினீங்கிய இறைவனை வாழ்த்தினார்களாம்; எதற்காகத் தெரியுமா? அவனை வாழ்த்தினால் 'தாம் வாழலாம்' என்ற உபாயந் தெளிந்து என்று மாணிக்கவாசக சுவாமிகளே கூறு கிறார்கள். இதனால் என்ன தெரிகிறது? நாம் இறை வனைத் திரிகரண சுத்தியாக வாழ்த்தினால் இறைவன் நம்மையெல்லாம் வாழவைப்பான் என்ற பேருண்மை யல்லவா! அதனால் வாழ்க! வாழ்க!! வாழ்க!!! என வாழ்த்துகிறோம்.

வாழப்பிறந்தவர்கள் மக்கள். அவர்கள் வாழ்க் கைக்கு என்றே ஆழ்கடல், உயரிய மலைகள், அடர்ந்த காடுகள், பால் பொழியும் பசுக்கள், காற்று, மேகம், ஆறுகள், ஒன்று ஆயிரமாக விளையும் வயல்கள், பழந் தரு மரங்கள் எல்லாம் படைக்கப்பெற்றுள்ளன. நாம் இவ்வளவையும் அநுபவித்துக்கொண்டே இவற்றைப் படைத்துக்கொடுத்த இறைவனை மறந்துவிடுகிறோமே; அதுதான் நமக்குள்ள சிறப்பியல்பு. உண்ட கை உலர் வதற்குமுன் உதவிய ஒருவனை மறப்பதே உயிரியல்பு. இத்தீய பழக்கத்தை விட்டொழிக்கவேண்டும் என்றே வள்ளுவர், எந்த வகையான அறத்தைச் சிதைத்தாலும்

கேடு பெரிதாகவிளைந்துவிடாது; பிராயச்சித்தம்செய்து கொள்ளலாம்; செய்த நன்மையை மட்டும் மறவாதே; கழுவாயில்லாத பாவம்; கவனம்; ஜாக்ரதை என்று அறிவிக்கிறார். ஆதலால் நாமும் செய்ந்நன்றி மறவாச் செம்மலாக இருக்கவேண்டின் உண்ணும் நீரினும், உயிரினும் அவனையே உவக்கவேண்டும். தன்னிலும் இனியவனாகத் தலைவனை நினைக்கவேண்டும் என்பார் அப்பர் அடிகள். ஆதலால், நாம் உண்ணும்போதும், உல்லாசமாக உலாவும்போதும், பருகும்போதும், உருகி அவனைத் தொழவேண்டும்; வாழ்த்தவேண்டும். அவனை வாழ்த்தினால் நாம் வாழ்வோம். அவ்வண்ணம் வாழ்த்தும்போது அவனுக்கும் நமக்குமுள்ள இயைபு, அவன் நமக்கு எப்படியெல்லாம் உபகரிக்கிறான் என்ற சிந்தனை பெருகும். அதனால் மனம் அவனிடம் லயிக்கும். மனோலயமே அவன் திருவடியில் என்றும் நீங்காத தொடர்பை உண்டாக்கும். ஆதலாலேயே மாணிக்க வாசகப்பெருமான் எல்லார் மனமும் என்றும் ஈடுபட வாழ்த்துகின்றார்.

நாம் ‘முருகா’ என்று ஒருவரை அழைக்கின்றோம். அழைத்தவுடன் அந்தப் பெயருடைய ஒருவரே நம்முன் வந்து நிற்கிறார். சொல்லின் ஆற்றல் பொருளை அறிவிப்பதுதானே. மணிவாசகப்பெருமான் ‘நமச்சிவாய வாழ்க’ என வாழ்த்துகிறார். இச்சொல்லம்பைக் கவனியுங்கள். இச்சொல்லின் பொருளாகிய சிவம் மிகமிக அணுமையிலிருக்கிறது இவருக்கு. அதனாலே சிவனுக்கு வணக்கம், அவன் வாழ்க என்று இருதொடர்மொழிகளால் வாழ்த்துகிறார். ‘நமச்சிவாய’ என்னும் இந்தப் பெயரிலுள்ள ஒவ்வோரெழுத்தும் ஒவ்வொரு சொல். தனித்தனியே பொருளுண்டு. ஆனால், இந்தச் சொல் ஞானசாத்திரானுபவநிலையில் அன்றி, இலக்கிய வழக்கிலும் உலகியல் உரையாடல்களிலும் இந்தப் பொருளை

உணர்த்தவே உணர்த்தாது. இந்த ஐந்தெழுத்தும் கூடியிருந்த நிலையிலும், இவற்றைப்பற்றிய தத்வார்த் தங்களை உணர்த்தும்போதும் அன்றி, இவை தனித் தனியாகவோ, அன்றி வேற்றுச் சொற்களோடு உறுப் பாகக்கூடியோ, வருமொழியாகப் புணர்ந்தோ இந்தப் பொருளை உணர்த்தாது. அவ்வண்ணம் உணர்த்துவ தாகக் கருதுவது மிகப் பாவமான செயல். ந என்பது திரோதானசத்தி. ம என்பது மலசத்தி. சி என்பது சிவம். வ என்பது சத்தி. ய என்பது உயிர்களாகிய நாம். இது ஞானசாத்திரங்களில் காணக்கிடைக்கும் திருமந்திரார்த்தம். இங்ஙனமே சிவயநம என்பதிலும் திரோதானத்தையும் மலத்தையும் உணர்த்தும் எழுத் துக்கள் இறுதியில்நின்றன. இவை மரபறிந்துகேட்டுச் சிந்தித்து அநுபவிக்கத்தக்க பொருள்கள்.

•

நம சிவாய என்றபோது மனிதனுடைய முனைப்பு அடங்குகிறது. மனிதன் தன்னை யாரும் வணங்க, தான் யார்க்கும் வணங்காத தன்மையில் வாழவிரும்புகிறான். இத்தகைய எண்ணத்திற்கு அடிப்படைக் காரணம் அவனை அநாதியே பற்றிநிற்கின்ற ஆணவமலத்தின் காரியமாகிய அகங்காரமே. அங்ஙனமிருக்க எவன் வாயில் முதலில் 'நமஸ்காரம்' என்ற சொல் வருகிறதோ அவன், அறிந்தோ அறியாமலோ தானென்ற அகங் காரம் அடங்கியவனாகிறான். அப்படி அடங்கியபோது உண்மைஞானம் உதிக்கிறது. யாருக்கு நமஸ்காரம்? நம்மால் நமஸ்காரம் செய்யத்தக்க பொருள் யாது? என்ற ஆய்வு அடியாகப் பிறந்த ஞானம். அப்போது 'சேர்ந்தறியாக் கையான்' என்று மாணிக்கவாசகரால் பாராட்டப்பெறுகிற சிவனே வணங்கத்தக்கவனென்ற ஞானம் உதிக்கிறது. உடனே சிவாயநம, நமசிவாய என இடைவிடாது ஓதுகிறான்; உணர்கிறான்; உள் ளொடுங்குகிறான். உணர்வொடுங்கி உணர்ந்தார்க்கு

உணர்வரிய உள்ளொளியில் தோய்கின்ருன். பின் மேனிலையினின்று மீளும்போது தன்னை இந்நிலையில் இன்பத்திருத்திய 'நமச்சிவாய வாழ்க' என வாழ்த்தெடுக்கிருன். இந்நிலையை உணர்ந்து ஓதி உணர்த்திய பெருமை மாணிக்கவாசகர்க்கே உரியது.

ஏனைய நாயன்மார்களுங்கூட 'நான் மறக்கினும் சொல்லும் நா நமச்சிவாயவே' 'நற்றுணையாவது நமச்சிவாயவே' 'நாவினுக்கு அருங்கலம் நமச்சிவாயவே' 'நல்லக விளக்கது நமச்சிவாயவே' 'செம்மையந் தணர்க்கு அந்தியுண் மந்திரம் அஞ்செழுத்துமே' 'நாதன் நாமம் நமச்சிவாயவே' என்று பாராட்டிப் போற்றியிருக்கிருர்கள்.

## தொடர்பு என்ன ?

இந்த 'நமசிவாய 'ப்பொருளுக்கும் நமக்குமுள்ள இயைபு என்ன? என்ற சிந்தனை எழுவது இயற்கை. இயைபு இல்லாத ஓரிடத்தில் மனம் ஈடுபடாதல்லவா? அப்பொருள் நமக்கு நாதன். நமக்கெல்லாம் ஆன்மா என்ற ஒரு பொதுப்பெயருண்டே! அவற்றிற்கெல்லாம் அவன் நாதன். ஆமாம் ஆன்மநாதன். திருப்பெருந் துறையில் கோயில்கொண்டு எழுந்தருளியிருக்கின்ற இறைவனும் ஆன்மநாதன்தானே !

இந்த நாதன் என்ற சொல்லால் ஓர் அடிமை தன் முதலாளியை அழைக்கிருன். காதலி தன் காதலனை அழைக்கிருள். சொல் ஒன்ருனாலும் இருவரும் கருதும் அநுபவப்பொருள் வேறு. அடிமை தன் வயிற்றுப் பிழைப்பிற்கு உபகாரப்படுமளவிற்கே முதலாளியை நாதனுக்குகிருன். சுருங்கச்சொன்னல் அவன் நாதனைக் கருதுவது பொருளாதாரப் புற இன்பத்திற்காகவே.

காதலி தன் வாழ்வு, தாழ்வு, அக இன்பம், புற இன்பம் அனைத்திற்கும் தன்னுடைய காதலனை நாதனாக மதிக்கிருள்; அவனில்லையானல் தனக்கு இன்பமே இல்லை; எல்லாம் சூனியம் எனக் கருதுகிருள். இந்த இரு முறையில் எது உயர்ந்தது? எதில் அநுபவச் சிறப்பு இருக்கிறது? பாருங்கள். கூலியைக் குறைத்துக்கொடுத்தால் போயிற்று அடிமை சொல்லும் நாதன் உரிமை. அதட்டிப் பேசினல் போயிற்று அடிமை சொல்லும் நாதன் பெருமை. ஓர் அடிமையைத் தாழ்த்தி ஓர் அடிமையை உயர்த்திப்பேசினலும் போச்சு. காகத்து இரு கண்ணிற்கு ஒரு மணி கலந்தாங்கு இருவர் ஆகத்து ஓருயிர் கண்டாற்போல உள்ள காதலன் காதலியர் தொடர்பு அப்படி அற்றுப்போகக்கூடியதா? 'இப்பிறப்பில் பிரியேன்' என்று சொல்லியதற்காக மறுமையில் பிரிவு உண்டென்று கருதி அழுது அழுது வீங்கினளாம் ஒருத்தி என்றுரே வள்ளுவர். அப்படி ஏழெழுபிறவியினும் தொடரும் நாதன் உரிமையல்லவா காதலி கொண்டாடும் நாதன் உரிமை. அங்ஙனமாக எதனை நம் மணிவாசகர் கூறியிருப்பர். என்றைக்குக் குருந்த மரத்தடியில் தாம் குரு தரிசனம் செய்தாரோ! அன்றைக்கே அவர் பெண்ணுனர்; உண்மைக் காதலியானுர். ஆதலால் அவர் இறைவனை நாதன் என்று அழைத்தால் அது நாயக நாயகித் தொடர்புபற்றி எழுந்த - அன்பு கலந்த அழைப்பாகத்தானே இருக்கும். ஆதலால் நாதன் வாழ்க என வாழ்த்தக் கருதியவர் நாதன்தாள் வாழ்வதாக என வாழ்த்துகிருர். (தாள் - திருவடி.)

அவன் ஓரிமைகொட்டும் காலங்கூட என் நெஞ்சை விட்டு அகலாதவன். உலகில் உள்ள சில காதலியர் ஒருகணங்கூட எங்கள் வீட்டுக்காரரை விட்டுப் பிரிய மாட்டேன் என்று சொல்லக் கேட்கிருேம். அப்போது

பிரியாத தன்மை தன் காதற்பெருமையால் விளைவது என்று தற்பெருமை தோன்றுகிறது அல்லவா? அந்த முனைப்புங்கூட ஆகாது என்பதற்காக அவன் என்மீது வைத்த பெருங்கருணையால் எனது நெஞ்சை விட்டு இமைப்பொழுதும் பிரியான் என அவனுக்கு முதன்மையும் சிறப்பும் உரிமையும் தோன்றக் கூறுகின்றார். இது உள்ளபடி மனத்தைப் பறிகொடுத்த அநுபவிகளுக்கே உண்டாவதாய விளைவாம். இவ்வண்ணம் நெஞ்சில் பிரியாது அறிவுருவாயுறைகின்ற தலைவன், எல்லாரும் எளிதில் அடைந்து பணிந்து ஈடேறக் கோகழியிலும் எழுந்தருளியிருக்கின்றான். அதுவும், நல்லது காட்டித் தீயன களைந்து, செந்நெறி செலுத்தும் பரமாசாரிய புருஷனாக. அம்மட்டோ! நல்லது கெட்டது காட்டித் திருத்தும் ஆகம நூலாகியும் இனிக்கின்றான். ஒன்றாயும் பலவாயும் உடனாயும் இருக்கின்றான். இங்ஙனமாகக் கலந்துறையுங் கடவுள் திருவடி வாழ்வதாக.

## வெல்க! வெல்க! வெல்க!

பிறப்பா! அம்மம்ம! என்ன கொடுமை. தாய்க்கு எவ்வளவு சிரமம். பிறக்கின்ற குழந்தைக்கு மூச்சுத் திணறுகிறது. விழி பிதுங்குகிறது. கழுத்து நெரிகிறது. எல்லா அசுத்தங்களோடும் உருண்டு புரண்டு பிறக்கும் காலம் ஒரு பெரிய கண்டந்தான். இது மாடு முதல் மனிதன்வரை எல்லா உயிர்களுக்கும் சமந்தான். ஏன் புழுவுக்குங்கூடத்தான். பிறந்தபின் கத்தி, தத்தி, குந்தி, எழுந்து நடக்கிறவரையிலுந்தான் எவ்வளவு கஷ்டம். வளர்ந்தபின் வாழ்க்கையில் எவ்வளவு ஏற்றத்தாழ்வுகள். அதனால் விளைகின்ற ஆபத்துக்கள் எவ்வளவு. போட்டி பொறாமை அசட்டுத்தனம் இவற்றால் விளையும் பேரிடிகளோ அனந்தம்.

ஒரு வியாபாரி ஏதோ சில சரக்குகளைக் கட்டித் தூக்கிக்கொண்டு காலத்தில் சந்தையில் விற்றுத் தொலைக்கலாம் என்று போனான். போனவிடத்தில் இருந்த சரக்கை விற்பதுபோல் புதுச்சரக்கையும் அவன் கொள்முதல் பண்ணிக்கொண்டு தூக்கமுடியாமல் தவித்துக்கொண்டே வந்தானாம். அதுபோல நாமும் போனபோன ஜன்மங்களில் சேகரித்த மூட்டைகளைக் கழிக்கவே பிறந்தோம். உள்ளபடி கழிக்கின்றோமா? இல்லை. கழிக்கின்றபோது நாம் செய்கிறோம்; நம்மை ஒப்பவர்கள் யார்? நாம் இல்லாவிட்டால் இக்காரியம் நடக்குமா? என்ற ஆணவம் பேய்போலப் பிடித்தாட்டு கிறது. மூட்டை ஏறுகிறது. மறுபடியும் பிறவிக்கு வழிதேடிக்கொள்கிறோம். இப்படிப் பிறவியென்றாலே பெரிய அச்சம். இதனை அறுக்கவேண்டும். வேரோடு அறுக்கவேண்டும்: கொஞ்சங்கூட முளை இருக்கவே கூடாது. அப்படி முளையோடு அறுக்கவேண்டுமானால், மனவேகத்தை அடக்கவேண்டும்.

மனம் பொல்லாதது. அது குரங்கு. ஒன்றை விட்டு ஒன்றைப் பற்றும். சில சமயங்களில் பிடித்ததை விடா மல் இறுகப்பற்றி நிற்கும். விஷப்பாம்பாயிருந்தாலும் பிடித்ததை அது விடாது. இந்த மனக்குரங்கு இப்படி வேகங்கொண்டு அலைவதாலேயே கன்ம மூட்டையும் வலுக்கிறது. இக்கன்ம மூட்டையைக் கரைத்தால்தான் பிறவியறும். மனவேகத்தை அடக்க நம்மாலாகாது. குரங்கை அடக்கக் கோல் பிடித்த குரங்காட்டி தேவை. மனக்குரங்கின் சேட்டையை அடக்கக்கூடிய வல்லமை குருநாதன் ஒருவருக்கேதான் உண்டு. அதனாலேயே 'வேகம் கெடுத்து ஆண்ட வேந்தன்' என்ற பெயர் அவருக்கு உண்டாயிற்று.

அடுக்குப் பானையிலே உள்ள அடிப்பானையைத் தட்டிவிட்டால் எல்லாம் விழுந்து உடைவது போல

மனவேகத்தை அவர் அடக்கியதும் அடுக்குஅடுக்காக, புல்லாய், பூண்டாய், புழுவாய், மரமாய், மிருகமாய், பறவையாய், பாம்பாய், அசுரராய், தேவராய், மக்களாய் வருகின்ற பிறவிகள் அறுகின்றன. அவ் வண்ணம் நம் மனவேகத்தை அடக்கி, பிறவியை அறுத்து ஆட்கொண்டு பேரின்பவீட்டிலே இருத்து கின்ற இறைவன் திருவடிகள் வெல்க.

அந்தப் பரம உபகாரியினுடைய சிறப்பியல்புகள் சில சொல்லட்டுமா?

எல்லா வளங்களும் நிறைந்த நாட்டில் பிறந்தும், இறைவன் திருவடி சம்பந்தம் பெற்ற குடும்பங்களில் பிறந்தும், கடவுளுணர்ச்சியில்லாத நாத்திகராகவும், மக்களைத் தேவராக மதித்து வழிபடுகின்ற புறப்புறச் சமயங்களைப் பற்றியவர்களாகவும், தம் கருத்தையே பெரிதாக மதித்து நடப்பவர்களாகவும் இருக்கும் புற மதத்தார்க்கு மிகமிகத் தூரத்தில் இருப்பவன் அவன்.

யார் ஒருவர் மனம் ஒன்றி, தலை வணங்குகின்றார் களோ அவர்களை உயர வைப்பவன். கும்பிடுகின்ற வர்களின் உள்ளத்தில் மகிழ்ந்திருப்பவன். அவனே ஈசன், நேசன், நிமலன், மன்னன் எல்லாம்.

அவனை நான் கண்டு உய்ந்ததலம் பெருந்துறை. அவன் ஓர் இன்பமலைதான். அவன் என் சிந்தையுள் என்றும் பிரியாமல் இருக்கின்றான். அவன் கருணை என்னை வணங்கச்செய்கிறது. நான் அவனை வணங்கு கிறேன். பற்பல பிறவிகளில் சேகரித்துவைத்த வினை மூட்டை கரைய அவன் புகழாகிய சிவபுராணத்தைச் சொல்லுகிறேன்.

ஆனால் எனக்கோ அவனைப் புகழத் தெரியவில்லை. அவன்புகழ் என் அறிவின் எல்லைக்குள் அடங்கியதாக

இல்லை. இந்த அறியாமைக்கு நான் யாரை நோவது? ஆன்மாவாகிய எனது வியாபக அறிவை மறைத்து நிற்பன எனது பொல்லா வினைகளே.

நான்பட்ட கஷ்டங்களைப்பற்றிக் கொஞ்சம் சொல் லட்டுமா? இருப்பனவும் அசைவனவுமாகிய எல்லாப் பிறவிகளையும் எடுத்துவிட்டேன். நான் பிறக்காத பிறவியும் இல்லை; இடமும் இல்லை எனலாம். அப்படிப் பிறந்ததால் நான் அடைந்த பயன் என்ன? தெருச் சுற்றிய நாய் நாக்கைத் தொங்கப்போட்டுக்கொண்டு இரைக்க இரைக்க ஓடிவந்ததே அந்தப் பயனைத்தான் நானும் அடைந்தேன்.

வெயிலில் வந்தவனுக்கு நிழல்மரம் கிடைத்தது போலக் களைத்த எனக்கு உன்னுடைய திருவடிநிழல் கிடைத்தது. அதனாலே என்மனத்தே பரநாததரிசனம் பதிந்தது. அதனாலே 'நீயே, இடபாரூடராய் அநுக் கிரகிக்கும் ஆண்டவன்; மலம் அற்றவன்; சூரியன் ; சந்திரன்; இயமானன்; மெய்ஞ்ஞானச்சுடர்; இன்பப் பெருமான்; நீயே அனைத்தும்' என்ற உண்மை சிறிது உதித்தது. வேதங்களெல்லாங்கூட உன்னை இடை விடாது அழைக்கின்றன. நீ உயர்ந்தவற்றிற்கெல்லாம் உயர்ந்தபொருளாய், ஆழமானவற்றிற்கெல்லாம் ஆழ மாய், அகன்றவற்றிற்கெல்லாம் அகன்றதாய் இருக்கி றாய். உலகில் காணப்பெறும் பொருள்கள் உயரம், ஆழம், அகலம் என்ற அளவைகளாலேயே அறியப் பெறுவன. அந்த மூன்றாலும் அளவிடற்கரியவனாக இருப்பவன் நீயே. இருளைப்போக்கும் சூரியன்போல, அறியாமையைப் போக்குகின்ற அறிவாய் விளங்கும் உண்மைஞானப் பேரொளி நீயே.

உனக்கு முதலில்லை; நீயே எல்லாருக்கும் எல்லா வற்றிற்கும் முதல். உனக்கு எல்லை இல்லை: நீயே

அனைத்திற்கும் எல்லை. எல்லாவற்றையும் படைப்பதும் காப்பதும் அழிப்பதும் அருளுவதும் மறைப்பதும் உன்செயல். என்னையும் என்போன்றாரையும் என்றும் அடிமைப்பதவி யளித்தாட்கொண்டாய். அம்மட்டோ! பூவிலே உள்ள மணம்போல என் உயிர் மணமாக உள்ளவன் நீயே. நான் பெரியவன் என்று எந்தக் கணத்தில் நினைக்கின்றேனோ அப்பொழுது என்னை விட்டுப் பலமைல்தூரம் உள்ளவனாகிறாய். 'என்றும் இறைவனுடைய உடைமைப்பொருள் நாம்; நமக்கு என்று ஒரு சுதந்தரமும் இல்லை; ஆற்றின்வழி மிதவை போல அவன் அருள்வழியே நாம் நடக்கிறோம்' என்று எண்ணுகிறேனோ அன்று எனக்குக் கிட்ட இருப்பவன். அவனைப்பற்றி எனக்குத் தெரிந்த சில சொற்களால் புனைந்து புனைந்து பார்க்கிறேன். அவன்புகழ் என் வார்த்தையில் அடங்கியதாக இல்லை. என் வார்த்தைகளுக்கு அடிப்படையான எண்ணங்களைக் கொடுக்கின்ற மனத்தையும் கடந்தவன் அவன்.

வீட்டிற்கறந்த பசும்பாலில் சர்க்கரை, தேன்கலந்து உண்டால் எப்படியிருக்குமோ அப்படி அடியார்கள் மனத்தில் இனிப்பவன். இவையெல்லாம் இறைவன் இயல்புகள்.

## *என்னிலை என்ன என்று கேட்கிறீர்களோ?*

நான் என்னிஷ்டப்படி ஓடி ஆடித் திரியாதபடி இரண்டு விலங்குகள் எனக்குப் பூட்டப்பெற்றுள்ளன. ஒரு விலங்கு இருப்பு விலங்கு. ஒரு விலங்கு பொன் விலங்கு. இருப்பு விலங்கு துன்பம் என்ற பெயராலேயே துன்பத்தைத் தருகிறது. பொன் விலங்கு இன்பம் என்ற பெயரால் துன்பத்தை விளைவிக்கிறது. இருப்பு விலங்கு தீவினை. பொன் விலங்கு நல்வினை.

இவ்வினைகளை விலக்க யாராலும் முடியாது. இறைவன் கருணைக்கண் இருந்தால் ஏதோ பார்க்கலாம். அத் தகைய வினைகள் என்னைப் பற்றிநிற்கின்றன. அவற் றிற்குக் கால்கொடுத்துத் துணையாக மாயை என்ற பேரிருள் மறைத்து நிற்கிறது. அதனால் காதலாகிக் கசிந்து உள்ளுருகும் நற்குணம் என்னைவிட்டு ஓடிப் போயிற்று. ஆதலால் வாசலுக்கு வாசல் மல மூத்திரங் களாக, வழுவாக, ஈளையாக, மலம் சொரிகிற ஓட்டைக் குடிசையில் புண்ணியம் பாவம் என்ற கயிற்றினால் கட்டப்பெற்றுக் கிடக்கின்றேன். எனக்கு உலக விஷய சுகங்களைத் தெரிவிக்கும் கருவிகளைப்போல இருக்கிற கண், காது, மூக்கு, நாக்கு, உடலாகிய பொறிகளும் இவற்றை வழியாகக்கொண்டு மயக்கி நிற்கும் புலன் களும் உடனிருந்தே வஞ்சனையைச் செய்கின்றன. என் மனமோ இக்கருவிகளைப் பற்றிக்கொண்டு போகாத இடத்திற்குப் போகிறது. இப்படியெல்லாம் என் சூழல் கெட்டிருந்தும் உன் பெருங்கருணையால் நீ தாயைப் போலக் காப்பாற்றுகிறாய். உன்னிலையிலிருந்தும் கீழ் இறங்கி, இந்தக் கன்ம பூமியில் வந்து திருவடிகளைக் காட்டி நீ ஆட்கொண்டாய்.

நீயே மாசற்ற சோதியாய், கண்களுக்கு உதவி செய்கிறாய். தேனாக, அமுதாக நாவுக்கு உதவுகிறாய். என் கட்டை அறுத்துப் பேரின்ப வீட்டை அளிக்கிறாய். மனவிருளை மாற்றி வஞ்சனையைப் போக்கி மனத்தில் வலியவந்து குடியேறி, என்றும் பிரியாதிருந்து காத்து வருகிறாய். இவை தேவரீர் அடியேனுக்குச் செய்யும் உபகாரங்கள்.

இவ்வண்ணம் நீ உதவுவது ஏதாவது கைம்மாறு கருதியோ என்றால் அதுதானில்லை. உனக்கு இன்ப மும் இல்லை. துன்பமும் இல்லை; அவை இல்லையாகவே

விருப்பு வெறுப்பு இல்லை. விருப்பு வெறுப்பு இல்லாதவர்க்கு கைம்மாறு வேண்டுவதே இல்லை. ஆனாலும் உயிர்கள் உணர்ந்து தம் திருவடியைப்பற்றி நிற்க அன்பர்க்கு அன்பனாக வம்பருக்கு வம்பனாக இருக்கிறாய்! அதனாலே இன்பமும் துன்பமும் உள்ளவராகக் கருதப்பெறுகிறாய்! இவ்வளவுதான்.

உலகிலுள்ள சித்துப்பொருள் சடப்பொருள் எல்லாமாயும் அவற்றினின்றும் பிரிந்து வேறாகியும் உள்ள பெருஞ்சோதிப் பெருமான் நீ. அப்படி எண்ணும் பொழுது இருளும் ஒரு பொருள்தானே. அதுவும் சடப்பொருள். அது தன்னையும் காட்டாது; பொருளையும் காட்டாது. அத்தகைய பொருளுக்குள்ளும் உன் வியாபகம் குறையவில்லை; செறிவாக இருக்கிறது என்றால் உன் பெருமைதான் என்னே! இந்தப் புறவிருளாகிய பூத இருள் கிடக்கட்டும். அக இருளாகிய ஆணவம் இருக்கின்றதே; அதனுள் தான் மறைக்கப்படாமல் அதனுள்ளும் செறிந்திருக்கின்றாய் என்றால் உன்னுடைய பெருமை எத்தகையது! என்னே உமது கருணை!

தாய் இருக்கிறாள். தன் குழந்தை அழாவிட்டாலும், பாலுண்டு நான்குமணிக் காலம் ஆகிவிட்டது; குழந்தையோ அயர்ந்து தூங்குகிறது; பசித்து அழாத குழந்தைக்குப் பாலென்ன? என்று இருக்கமாட்டாள். பாவம் குழந்தை நெஞ்சு உலர்ந்துபோகும் என்று ஓடி வந்து வலியத்தூக்கிப் பால் கொடுப்பாள். அதுபோல தேவரீரும் ஏதோ படிப்பு, பதவி, பணம், இன்பம், துன்பம், போர், அமைதி என்று பரபரந்து ஓடுகின்ற என்னை வலியப் பிடித்து இழுத்து, 'தம்பி! உன் கடமை என்ன? நீ எதற்காக இந்தப் பூமியில் பிறந்தாய்! இப்போது என்ன செய்கின்றாய்?' என்று அதட்டி

அறிவுறுத்தி, என்னுடைய அகங்காரத்தை அடக்கி அடிமையாக ஏற்றுக்கொண்டாய். இதனாலே சமயம் நேர்ந்தபோது அடித்துத் திருத்தும் அப்பனாகவும் நீ ஆகிறாய்.

## என்னால் தாங்கமுடியாது

கொண்ட வினைக்கேற்பக் குட்டையாக, நெட்டையாக, அழகாக, விகாரமாக, இளைத்ததாக, பருத்ததாக இருக்கும் இந்த உடற்சிறையில் கட்டுப்பட்டுத் தவிக்க என்னால் ஆகாது.

யாரேனும் மெய்யடியார்கள் ஹரஹர என்று போற்றுவார்களானால் அவர்களுடைய பொய்யான உலகியலி லுள்ளபற்றை மாற்றி, உண்மையடியாராகத் திருவுளம் பாலித்து, உடற்சிறையிலிருந்து விடுதலை அளிக்கின்றாய். அவர்களும் அந்நிலை பெற்றனர். அப் பேற்றினை அடியேற்கும் அளிக்கவேண்டும்.

## உன்னைத் துதிக்கும் முறை

அப்பப்பா ! பிறவி எடுத்தது போதும். சிறை செல்கிறவனுக்குச் செல்கிறபோது ‘ஆம் ஆம் நாம் செய்த குற்றத்திற்கு இத்தண்டனை பொருத்தந்தான்; இனி ஒருபோதும் நான் குற்றமே செய்யமாட்டேன்; இது உறுதி’ என்றுதான் எண்ணுகிறான். திரும்பி வந்தான். சிலமாதங்கள் தாகங்களுக்கும் பாசங்களுக்கும் இடையே வாழ்கிறான்; பழைய பெருமாள் பெத்த பெருமாளாகிவிடுகிறான். வளர்ச்சியேயன்றி மாற்றம் இல்லை. அதுபோல நாம் சிவகருணையாலும், எடுத்த பிறவிபோதும்; ஈட்டிய வினைபோதும்; பட்ட கஷ்டம் போதுமென்று எண்ணத்தான் செய்கிறோம். ஆனாலும் இந்திரியங்களின் குறும்பு, மனமாகிற சகுனிமாமாவின்

சகாயம், பணம், எடுப்பாரும் பிடிப்பாருமாகிய ஏவன் மாக்கள், இவற்றின் சூழ்நிலை எல்லாமாகக்கூடி மீட்டும் பிறந்த இடத்தை நாடவைக்கின்றன. இந்த நிலையை மாற்றிக்கொள்ள சிவசகாயந்தான் தேவை. சிவனருளை 'சிக்கெனப் பிடித்தேன் எங்கெழுந்தருளுவது இனியே' என்று இறுகப் பற்றுவோமானால் அவன் கள்ளப்புலக் குரம்பைக் கட்டை அவிழ்த்துவிடுவான். கள்ளப்புலம் என்றதன் அநுபவத்தை நன்கு சிந்தியுங்கள். மனிதன் தகுதி, படிப்பு, பதவி, சமுதாய அமைப்பு இவற்றின் இடையே வாழ்கின்றவன். ஆதலால் தன் பொறிகளைக் கண்டபடி திரியவிடாமல் கட்டுப்படுத்தி வைத்துக் கொண்டிருக்கிறான். ஆனால் புலன் உணர்வு இவன் அயர்ந்த நேரம் பார்த்துப் பிய்த்துக்கொண்டுதான் போகிறது. இப்படிப்பட்ட புலன்கள் குடியிருக்கும் ஓட்டைவீட்டை அழிப்பது மிக இலேசான காரியமா? இறைவன் அதனையும் தமது அளவிலா ஆற்றலால் செய்கிறான். எல்லா உயிர்களும் தனித்து ஓடுங்கி யிருக்கிற நிலையிலாவது மகிழ்ச்சியோடு இருக்கட்டுமே என்று சர்வசங்காரகாலத்து நள்ளிருளில் நடம் செய் கிறான். அவனை நட்டம்பயின்றாடுநாதனே! தில்லையுள் கூத்தனே! அல்லல் பிறவியறுப்பானே! என்றெல்லாம் ஏத்துங்கள்.

## இன்பத்து என்றும் இருக்கலாம்

மாடமாளிகை கட்டி, மெய்க்காப்பாளர் நடுவிலே வாழ்கிறோம். நம்மைச்சூழ இன்பப்பொருள்கள் சூழ்ந் திருக்கின்றன. ஆனால் மழை, காற்று, இடி, மின்னல், பாம்பு, புலி, திருடர், பகைவர், பூதம், பிசாசு இவை கட்குத் தப்பி வாழமுடிகிறதில்லை. இன்பமயமேயான இடத்தைத்தான் மனிதமனம் பரிபாகமுற்ற நிலையில் நாடுகிறது. அந்த இடம் சிவனடிமலர்தாம். அதன்

நிழலிலே இருந்தால் கவலே இல்லே; அச்சம் இல்லே; துன்பம் இல்லே. அம்மையாரும், 'அறவா! நீ ஆடும் போது நின் அடியின்கீழ் இருக்க' வரம் கேட்டது சும்மாவா? இன்பங்கண்ட அவர் இறைவனே அந்த இடத்தைச் சுட்டிக் கேட்கிருர். அதுபோலவே நாமும் தில்லேயுட்கூத்தனே! தென்பாண்டி நாட்டானே! என்று ஏத்திஞல் - அவனது அளவிலாப் புகழமைந்த அருட் பாடல்களேப் பொருள்தெரிந்து நாம் தோத்தரித்தால் சிவபுரத்தில் சிவனடிக்கீழ் என்றுமே இன்பம் பெருக இருக்கலாம். இன்பம், இன்பம். என்றும் எங்கும் இன்பம்.



உ

சிவமயம்

### மாணிக்கவாசககசுவாமிகள் அருளிச்செய்த

# சிவபுராணம்

[சிவனது அநாதி முறைமையான பழமை]

திருச்சிற்றம்பலம்

## தோத்திரம்

நமச்சிவாய வாஅழ்க! நாதன்தாள் வாழ்க!
இமைப்பொழுதும் என்நெஞ்சின் நீங்காதான் தாள்
கோகழி யாண்ட குருமணிதன் தாள்வாழ்க! [வாழ்க!
ஆகம மாகிநின்று அண்ணிப்பான் தாள்வாழ்க!
ஏகன் அநேகன் இறைவன் அடிவாழ்க!
வேகங் கெடுத்தாண்ட வேந்தனடி வெல்க!
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பெய்கழல்கள் வெல்க!
புறத்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க!
கரங்குவிவார் உண்மகிழும் கோன்கழல்கள் வெல்க!
சிரங்குவிவார் ஓங்குவிக்கும் சீரோன் கழல்வெல்க!
ஈச னடிபோற்றி! எந்தை யடிபோற்றி!
தேச னடிபோற்றி! சிவன்சே வடிபோற்றி!
நேயத்தே நின்ற நிமல னடிபோற்றி!
மாயப் பிறப்பறுக்கும் மன்ன னடிபோற்றி!
சீரார் பெருந்துறைநம் தேவ னடிபோற்றி!
ஆராத இன்பம் அருளு மலைபோற்றி!

## முகவுரை

சிவனவனென் சிந்தையுள் நின்ற அதனால்
அவனரு ளாலே அவன்தாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுரா ணந்தன்னை
முந்தை வினைமுழுதும் ஓய உரைப்பன்யான்

கண்ணுதலான் தன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி
எண்ணுதற்கு எட்டா எழிலார் கழலிறைஞ்சி
விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய் விளங்கொளியாய்
எண்ணிறந் தெல்லை யிலாதானே! நின்பெருஞ்சீர்
பொல்லா வினையேன் புகழுமாறு ஒன்றறியேன்!

### பிறப்புக்கள்

புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்!

### ஞானகுரு

மெய்யேஉன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்
உய்யஎன் உள்ளத்துள் ஓங்கார மாய்நின்ற
மெய்யா! விமலா! விடைப்பாகா! வேதங்கள்
ஐயா! எனஓங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே!
வெய்யாய் தணியாய் இயமான னாம்விமலா!
பொய்யா யினஎல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே!
எஞ்ஞானம் இல்லாதேன் இன்பப் பெருமானே!
அஞ்ஞானந் தன்னை அகல்விக்கும் நல்லறிவே!

### ஐந்தொழில்

ஆக்கம் அளவிறுதி இல்லாய் அனைத்துலகும்
ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள்தருவாய்
போக்குவாய் என்னைப் புகுவிப்பாய் நின்தொழும்பின்
நாற்றத்தின் நேரியாய் சேயாய் நணியானே!
மாற்றம் மனங்கழிய நின்ற மறையோனே!

கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற் போலச்
சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று
பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான்!

### அருள்

நிறங்களோர் ஐந்துடையாய் விண்ணோர்கள் ஏத்த
மறைந்திருந்தாய் எம்பெருமான்! வல்வினையேன்
மறைந்திட மூடிய மாய இருளை [றன்னை
அறம்பாவம் என்னும் அருங்கயிற்றால் கட்டிப்
புறந்தோல்போர்த் தெங்கும் புழுவழுக்கு மூடி
மலஞ்சோரும் ஒன்பது வாயிற் குடிலை
மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய
விலங்கு மனத்தால் விமலா! உனக்குக்
கலந்த அன்பாகிக் கசிந்துள் ளுருகும்
நலந்தான் இலாத சிறியேற்கு நல்கி
நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி
நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத்
தாயிற் சிறந்த தயாவான தத்துவனே!

### துதி

மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே!
தேசனே! தேனார் அமுதே! சிவபுரனே!
பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே!
நேச அருள்புரிந்து நெஞ்சில்வஞ் சங்கெடப்
பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே!
ஆரா அமுதே! அளவிலாப் பெம்மானே!
ஓராதார் உள்ளத்து ஒளிக்கும் ஒளியானே!
நீராய் உருக்கிஎன் ஆருயிராய் நின்றானே!
இன்பமும் துன்பமும் இல்லானே உள்ளானே!
அன்பருக்கு அன்பனே! யாவையுமாய் அல்லையுமாம்
சோதியனே! துன்னிருளே! தோன்றாப் பெருமையனே!

ஆதியனே! அந்தம் நடுவாகி அல்லானே!
ஈர்த்தென்னை யாட்கொண்ட எந்தை பெருமானே!
கூர்த்தமெய்ஞ் ஞானத்தாற் கொண்டுணர்வார் தங்கருத்தின்
நோக்கரிய நோக்கே! நுணுக்கரிய நுண்ணுணர்வே!
போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே!
காக்குமெங் காவலனே! காண்பரிய பேரொளியே!
ஆற்றின்ப வெள்ளமே! அத்தா! மிக்காய்நின்ற
தோற்றச் சுடரொளியாய்ச் சொல்லாத நுண்ணுணர்வாய்
மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாம்
தேற்றனே! தேற்றத் தெளிவே! என் சிந்தனையுள்
ஊற்றான உண்ணா ரமுதே! உடையானே!

விண்ணப்பம்

வேற்றுவிகார விடக்குடம்பி னுட்கிடப்ப
ஆற்றேன் எம்ஐயா! அரனேயோ! என்றென்று
போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்யானார்
மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பை கட்டழிக்க வல்லானே!
நள்ளிருளில் நட்டம் பயின்றாடு நாதனே!
தில்லையுட் கூத்தனே! தென்பாண்டி நாட்டானே!
அல்லற் பிறவி அறுப்பானே! ஓவென்று
சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தி னுள்ளார் சிவனடிக்கீழ்ப்
பல்லோரும் ஏத்தப் பணிந்து.

திருச்சிற்றம்பலம்